30th September 1958]

**Sri A. VEDARATHNAM :** உணவுப் பயிர்களில் விழுகிற பூச்சியைத் தடுப்பதற்காக தெளிக்கப்படுகிற பாலிடால் மருந்து மூலமாக விஷம் பரவாமல் இருப்பதற்கு ஏதாவது ஆராய்ச்சி நடந்திருக்கிறதா ? அம்மாதிரி பரவாமல் இருக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** இம்மாதிரியான பச்சை மருந்தை விற்கும்போதுகூடவே எப்படி இதை உபயோகப்படுத்த வேண்டும் என்பதற்கு ஒரு அறிக்கையும் கொடுக்கிறார்கள். மேலும் பாலிடால் கொடுக்கும்போது கூடவே ஒரு ஆள் சென்று அதை எப்படி உபயோகப்படுத்துவது என்று சொல்லி வருகிறார்கள்.

*Road Inspectors and Attenders in the Highways Department*

*651 *Q*—**Sri M. C. MUTHUKUMARASWAMY :** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை மாகாணத்தில் பெரும்பாட்டை (**Highways**) இலாகாவில் பணிபுரியும் பர்மனெண்ட் (**permanent**) டெம்பரரி) (**temporary**) ரோடு இன்ஸ்பெக்டர்கள், ஆபீஸ் அட்டெண்டர்கள் எத்தனை பேர்—

(ஆ) இவர்களில் ஹரிஜன வகுப்பினர் எத்தனை பேர் ?

**The Hon. Sri P. KAKKAN :**

| | Total. (1) | Harijans among them. (2) |
|---|---|---|
| Number of *permanent* Road Inspectors .. | 657 | 26 |
| Number of temporary Road Inspectors .. | 1582 | 58 |
| Number of permanent office attenders .. | 56 | 5 |
| Number of temporary office attenders .. | 157 | 20 |

**Sri M. C. MUTHUKUMARASWAMY :** இந்த அசிஸ்டெண்டுகள் தொடர்ந்து வேலை செய்து வந்தும்கூட இன்னும் அநேகர் பர்மனெண்ட் செய்யப்படாமலேயே இருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதற்குத் தீவிர நடவடிக்கை எடுத்து காயம் செய்ய ஏற்பாடு செய்வார்களா ?

**The Hon. Sri P. KAKKAN :** கனம் அங்கத்தினர் கேட்ட கேள்வி ஹரிஜன வகுப்பார் எவ்வளவு பேர் இருக்கிறார்கள் என்பதுதான். தனியாக வேறு கேள்வி போட்டால் நான் பதிலளிக்கிறேன்.

*Revenue Secretariat*

* 652 *Q.*—Sri M. SELVARAJ (on behalf of Sri A. V. P. Asaithambi) : Will the Hon. the Chief Minister be pleased to state whether it is a fact that Officers not qualified for Deputy Collector's post or not having revenue qualifications are being posted to the Revenue Department of the Secretariat?

The Hon. Sri C. SUBRAMANIAM : " Yes Sir. In view of the single unit system for Assistant Secretaries and Deputy Secretaries, such postings have occasionally to be resorted to in vacancies of short duration, though as far as possible this is being avoided particularly when filling up long term vacancies. I may

[30th September 1958

also add that as far as Secretariat Officers are concerned, the general criterion followed even in selection, is merit and ability to work in any department.

**Sri A. GOVINDASAMY** : ரெவின்யூ க்வாலிபிகேஷன் உள்ள வர்கள் வேறு இலாகாவில் இருக்கிற விஷயம் அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அவர்களுக்கு எல்லாம் ரெவின்யூ இலாகாவில் வேலை தருவதற்கு அரசாங்கம் முயற்சிக்குமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : ரெவின்யூ இலாகாவிற்கு எத்தனை ஆட்கள் தேவைப்படுகிறார்களோ அத்தனைப்பேர்களைத்தான் அங்கே அனுமதிக்கவேண்டியிருக்கிறது. ரெவினியூ தகுதி பெற்றவர்கள் எல்லோரையும் அந்த இலாகாவில் போட வேண்டும் என்பது முடியாத காரியம்.

*Cattle farm at Korrukkai*

* 653 *Q.*—Sri A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state with reference to the answer furnished for question No. 526 on 2nd April 1958—

(*a*) whether the scheme for starting a Cattle Farm at Korrukkai, Tiruthuraipoondi taluk, has been examined; and

(*b*) if so, when it will be taken up for execution?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) The proposal is being examined.

(*b*) With a view to establish a Cattle Farm at Korrukkai necessary particulars about the lands to be acquired for the Farm have been called for from the Collector of Tanjore.

**Sri A. VEDARATHNAM** : அந்த இடத்தில் ஏராளமாகப் புறம் போக்கு நிலங்கள் இருக்கின்றன. சில மிராசுதார்கள் தனக்குச் சொந்த மான நிலங்களைக்கூட இனமாகக் கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். முன்பு சர்வே செய்த பிரகாரம் அங்கே உம்பளச்சேரி கால்நடை வளர்ப்புப் பண்ணையை விரைவில் அமைக்க முன் வருவார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அங்கே ஒரு பண்ணையை ஆரம்பிக்கவேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம். அங்கேயுள்ள புறம்போக்கு நிலங்களை இலவசமாகக் கொடுக்க முன் வருவதாக இருந்தால் அதைப்பற்றி ஒன்றும் கஷ்டம் இருக்காது. குறைந்த செலவில் பண்ணையை ஆரம்பித்துவிடலாம்.

**Sri K. ANBAZHAGAN** : தலைவர் அவர்களே, உம்பளச்சேரி இனத்தைச் சேர்ந்த வண்டி மாடுகளாக இருந்தாலும், கறவை மாடுகளாக இருந்தாலும் நல்ல முறையில் உபயோகப்படுகிறது என்று சொல்கிற காரணத்தினால் அதைப்பற்றி ஆராயப்பட்டதா ? உம்பளச்சேரி மாட்டுப் பண்ணையை ஆரம்பிக்கப் போவதாக கடந்த ஒரு ஆண்டு காலமாகச் சொல்லப்பட்டு வந்திருந்தும்கூட—கடந்த ஒரு ஆண்டு காலத்திற்கு முன் பாகவே விண்ணப்பம் அனுப்பியிருக்கிறார்கள் என்பது தெரியுமா ? என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : ஒரு ஆண்டுக்கு முன்பே ஒரத்த நாட்டில் ஒரு பண்ணை ஆரம்பிக்கப்பட்டு நல்ல பலன் அளித்து வருகிறது என்று கனம் அங்கத்தினருக்குச் சொல்ல விரும்புகிறேன்.